**ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிய**
**திருநெல்வேலித் திருப்புகழ்**
**(தாமிரசபை அழகிய உரிமை உடைய பெருமான் மீது பாடியது)**

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன ...... தனதான

நீலமுகி லானகுழ லானமட வார்கள்தன
நேயமதி லேதினமு ...... முழலாமல்

நீடுபுவி யாசைபொரு ளாசைமரு ளாகியலை
நீரிலுழல் மீனதென ...... முயலாமற்

காலனது நாவரவ வாயிலிடு தேரையென
காயமரு வாவிவிழ ...... அணுகாமுன்

காதலுட னோதுமடி யார்களுட னாடியொரு
கால்முருக வேளெனவு ...... மருள்தாராய்

சோலைபரண் மீதுநிழ லாகதினை காவல்புரி
தோகைகுற மாதினுட ...... னுறவாடிச்

சோரனென நாடிவரு வார்கள்வன வேடர்விழ
சோதிகதிர் வேலுருவு ...... மயில்வீரா

கோலவழல் நீறுபுனை யாதிசரு வேசரொடு
கூடிவிளை யாடுமுமை ...... தருசேயே

கோடுமுக வானைபிற கானதுணை **வாசுருதி**
**கூர்திருநெல் வேலியுறை ...... பெருமாளே**.

**பாடபேதம்:** வாகுழகர் கோடிநகர் மேவிவளர் ...... பெருமாளே (கோடி --- குழகர் கோயில்)